கீழ்; "மாற்பால்மனஞ்சுழிப்ப மங்கையர்தோள்கைவிட்டு" என்றும், "பரமாத்மநி யோ ரக்தோ விரக்தோ பரமாத்மநி" (பரமாத்மநியோரக்தோவிரக்தோபரமாத்மநி) என்றும் சொல்லுகிறபடியே, தன்பக்கலிலே நெஞ்சை வைத்தால் பின்பு புறம் போகவொட்டாதே. ஸௌந்தர்யம் * "மனைப்பால்பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம் - துறந்தார் தொழுதாரத்தோள்" என்று - மனைப்பால் பேரின்பத்தில் கைகழியவொட்டாதே. [செழுங்குருகூர்ச்சடகோபன்சொன்ன] - அதுக்கடியான ஜந்மபூமியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த. [தீர்த்தங்களாயிரம்] - ஆயிரம்பாட்டும் ஆயிரந்தீர்த்தங்களாயிற்று. இந் தப்பத்தை அப்யஸிக்கவல்லார்களை, தேவருண்டு - திருவடி, திருவநந்தாழ்வான், ஸேனை முதலியார் தொடக்கமானார், இவர்களை "நாள்தோறும்பவித்ரபூதர்" என்று ஆதரித்துக் கொண்டுபோந்து, தங்கள் மஹிஷிகளை ஸ்நேஹித்துக்கொண்டாடும் ஸமையிலே சொல்லுவார்கள். [நல்கியுரைப்பார் தந்தேவியர்க்கு] - மஹிஷிகளும் தாங்களுமாக ஸ்ரீவைகுண்டநாதனுக்கு அடிமைசெய்து, ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஓடமேற்றிக் கூலி கொள்ளுமளவானவாறே, அவர்களுக்கு ஸர்வஸ்வதானம்பண்ணிக் கனக்கத் தங்கள் ப்ரபாவத்தைச் சொல்லும்படியாகப்பெறுவர். ஓடமேற்றிக்கூலிகொள்ளும் ஸமையாகிறது - ஸகவத்விஷயத்தில் கைங்கர்யம்பண்ணும்போது எடுத்துக்கைநீட்டுகையிறே. சரமஶ்லோகம் ரக்ஷித்துக்கொண்ட அளவுபோலேயிருக்கும்அளவுகளிலே என்றபடி. * (அதாவது - உடையவர், திருக்கோட்டியூர்நம்பி தமக்கு அத்யந்தரஹஸ்யமாக உபதேசித்த சரமஶ்லோகத்தைத் தெற்காழ்வார்திருமுன்பேஎடுத்துக் கைநீட்டினவர்களுக்கு, அவர்கள் விஷயத்திலே உகப்பாலே அருளிச்செய்தாரிறே; அத்தைச்சொல்லுகிறது.) [வைகலும் பூசித்து] - "அபர்வணி கடல்தீண்டலாகாது" என்றாற்போலே, அதுக்கு ஒருநியதியில்லை யென்கை. வைகல் - காலம். "ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி" என்று தத்விஷயத்தில் இவர் ப்ரார்த்தித்தத்தை இது கற்ற ததீய விஷயத்திலே நித்யஸூரிகள் அடிமை செய்வார்கள். (கக)

---

"அத்தோள் - தொழுதார் - பேரின்பமெல்லாம் துறந்தார்" என்று அந்வயித்து அர்த்தம் - மனைப்பால் பேரின்பத்தில் இத்யாதி. கையானது - தோளானது. கழியவொட்டாது - போகவொட்டாதென்று ஸ்வபாவார்த்தம். அதுக்கடியான - இதரவிஷய ப்ராவண்யத்தைத் தவிரும்படி பிறந்த அத்யவஸாயத்துக்கு அடியான என்றபடி. ஆயிரம்பாட்டும் தீர்த்தம்போலே பாமபாவநமென்றபடி. "தேவர் - பூசித்து" என்றுகூட்டி அர்த்தம் - தேவருண்டு இத்யாதி. "நல்கி" என்றதுக்கு அர்த்தம் - இவர்களை - ஆதரித்துக்கொண்டு என்று. தேவியர்க்கு நல்கியுரைக்கைக்கு ஹேதுவேதென்ன - மஹிஷிகளும் இத்யாதி. நல்குதல் - ஸ்நேஹித்தலும், கொடுத்தலும். ஓடமேற்றிக்கூலிகொள்ளுமளவாவது - ஓடத்திலேற்றினபின்பு நட்டாற்றில் கூலிபொருந்தக்கொள்ளில் கொடாதிருக்கவொண்ணாத தசையென்றபடி. மஹிஷிகளெடுத்துக்கைநீட்டின ப்ரீதிப்ரகர்ஷத்தாலே என்றுகூட்டுவது. தங்கள் என்றது - இத்தை அப்யஸித்தவர்களை. "ஓடமேற்றிக் கூலிகொள்ளுமளவானவாறே" என்றதற்கு த்ருஷ்டாந்தம் - சரமஶ்லோகம் இத்யாதி. அதாவது - அதிரஹஸ்யமாகப் பேணிக்கொண்டிருந்த சரமஶ்லோகத்தை, த்ரௌபதிகுழல்முடிக்கைக்காக வ்யாஸயோகத்தாலே அர்ஜுநனுக்கு வெளியிடவேண்டும்படியான அளவுபோலேயிருக்கிற அளவுகளிலே என்றபடி. "வைகல்" என்றதுக்கு பாவம் - அபர்வணி இத்யாதி. ஸஹிதம் - ஒழிவில்காலம் இத்யாதி. தீர்த்தனுக்கற்றபின் என்றுதொடங்கி, வல்லார்களைத் தேவர்வைகல் பூசித்து - தீர்த்தங்களேயென்று - தந்தேவியர்க்கு - நல்கியுரைப்பர் இத்யந்வய:. (கக)

த்ரமிடோபநிஷத்ஸங்கதி.—[illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.—[illegible]

[illegible]

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

இன்பக்கவிபாடுவித்தானை இந்திரையோடு
அன்புற்றுவாழ் திருவாறன்விளையில்—துன்பமறக்
கண்டடிமைசெய்யக் கருதியமாறன்கழலே
திண்டிறலோர்யாவர்க்குந் தேவு.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

---

ஏழாம்பத்து ஸம்பூர்ணம்



PRINTED AT THE "NOBLE PRESS" TRIPLICANE, MADRAS.